டாய் என்று, வன்புபூண்டு ஒழுகு-கொடுமையை மேற்கொண்டு ஒழுகாநின்ற, வைண வம் பூண்டு - வைணவ நெறியைக் கைக்கொண்டு, பொறை இரக்கம் மானம் நீத்தார்- பொறுமையையும் கருணையையும் மானத்தையும் அறவே கைவிட்ட அவர்கள், துன்பு பூண்டு அயர்வாளை - துன்பத்தை மேற்கொண்டு சோருகின்ற கௌரியை, மகவை யும் கொண்டு அகத்தைவிடத் துரத்தினர்கள்-அக்குழவியையும் கைக்கொண்டு மனை யினின்று புறம்போக ஓட்டினர்கள்.

உருத்திரனுக்கு அன்பு பூண்டான் மகவுக்கு அன்புடையாய் என்றது அவர் கள் பொருமை யென்னும் சிறுமைக் குணத்தைக் காட்டுகின்றது. நீயும் என்னும் உம்மை, அவர்கள் எமக்கு ஆகாதவராதலே யன்றி என்னும் பொருள் தருதலால் எச் சவும்மை. ஆகாமை - பொருந்தாமை; பகைமை. முதலில் அவள் உறுந் துன்பத்தை யும் நோக்காது, மருகி யென்றும் எண்ணாது, இளங் குழந்தையின் அழுகையையும் கருதாது துரத்தினமையால் 'பொறையிரக்க மான நீத்தார்' என்றார். ஒழுகு என்னும் பெயரெச்ச முதனிலை நீத்தார் என்பதன் விகுதியைக் கொள்ளும். (௯௧)

தாயிலாப் பிள்ளைமுகந் தனைநோக்கித் தெருவினிடைத் தளர்வா ளுள்ளங்
கோயிலாக் கொண்டுறையுங் கூடனு யகனைமனக் குறிப்பிற் கண்டு
வேயிலாக் கியதடந்தோட் கௌரிதிரு மந்திரத்தை விளம்ப லோடுஞ்
சேயிலாக் கிடந்தழுத குழவிவிசும் பிடைவிடைமேற் றெரியக் கண்டாள்.

(இ - ள்.) தாய் இலாப் பிள்ளை முகம்தனை நோக்கித் தெருவினிடைத் தளர் வாள் - தாயில்லாத அப்பிள்ளையின் திருமுகத்தை நோக்கித் தெருவின்கண் வருந்தும் அக்கௌரியானவள், உள்ளம் கோயிலாக் கொண்டு உறையும் கூடல் நாயகனை - தனது உள்ளத்தைக் கோயிலாகக் கொண்டு எழுந்தருளி யிருக்கும் மதுரை நாயக ஞகிய சோமசுந்தரக் கடவுளை, மனக் குறிப்பில் கண்டு - மனத்தின் தியானத்தாலே தரிசித்து, வேயில் ஆக்கிய தடம் தோள் கௌரி திருமந்திரத்தை விளம்பலோடும் - மூங்கிலால் அமைத்தா லொத்த பெரிய திருத்தோள்களை யுடைய உமா தேவியின் திருமந்திரத்தை ஓதியவளவில், சேயிலாக் கிடந்து அழுத குழவி - சேய்மை யில்லை யாகக் (அண்மையிற்) கிடந்து அழுத அம்மகவு, விசும்பிடை விடைமேல் தெரியக் கண்டாள் - வானிலே இடப வூர்தியின்மேல் விளங்கத் தரிசித்தாள்.

சிவபெருமானைத் தாயிலாப் பிள்ளை என்று கூறிய நயம் ஓர்க. குறிப்பு - சிந் தனை; தியானம். ஆக்கிய - அமைத்தா லொத்த; வேய் போன்ற என்பது கருத்து. சேய்மை யில்லையாக என்பது 'சேயிலா' என்றாயிற்று. விடைமேல் மழவுரு நீத்துத் தெரிய வென்க. (௯௨)

மழவுருநீத் தடலேற்றின் வருவார்தம் மிடத்தணங்கின் மனுவை யோதிப்
பழகியபார்ப் பனமகளைப் பார்ப்பதியின் வடிவாக்கிப் பலருங் கண்டு
தொழவிடைமே லேற்றிவிசும் பாருக மலர்மாரி சுரர்க ளுற்ற
அழகரெழுந் தருளினர் களிதூங்கி யதிசயித்தா ரவனி மாக்கள்.



(இ - ள்.) மழ உரு நீத்து அடல் ஏற்றின் வருவார் - குழவி வடிவத்தை நீக்கி வெற்றி பொருந்திய இடபவூர்தியில் வருகின்றவராகிய, அழகர் - சோமசுந்தரக் கடவுள், தம் இடத்து அணங்கின் மனுவை ஓதிப்பழகிய பார்ப்பன மகளை - தமது இடப்பாகத்திலமர்ந்தருளும் உமாதேவியின் திருமந்திரத்தை உச்சரித்துக் கைவந்த கௌரியம்மையை, பார்ப்பதியின் வடிவு ஆக்கி-உமையின் சாரூபத்தை அளித்தருளி, பலரும்கண்டு தொழ - யாவருங்கண்டு வணங்க, சுரர்கள் மலர் மாரினுற்ற - தேவர் கள் மலர் மழை பொழிய, விடைமேல் ஏற்றி - இடபவூர்தியில் ஏற்றிக்கொண்டு, விசும்பு ஆருக எழுந்தருளினர் - வான்வழியாக எழுந்தருளினர்; அவனி மாக்கள் களிதூங்கி அதிசயித்தார் - புவியிலுள்ள மக்கள் களிப்பிலழுந்தி வியப்புற்றார்கள்.

அழகர் என்பதனை முன்னர்க்கூட்டி, வருவாராகிய அழகர் என்க. பார்ப் பதியின் வடிவு - உமையின் சாரூபம். மகளை ஏற்றி எழுந்தருளினர் என்க. (௯௩)

ஆகச் செய்யுள் - ௧௪௯௰.

